உ

கடவுள் துணை.

—*—

மண்டலபுருடன் அருளிச்செய்த

ஒருசொற்பலபொருட்டொகுதியாகிய

# பதினோராவது நிகண்டு

மூலமும் உரையும்.

---

இவை

தமிழ்ப்புலவராகிய

புதுவை.

நயனப்பமுதலியாரால்.

முன்பதிப்பித்தபிரதியைக்கொண்டு

—*—

இஃது.

சரவணபுரம்

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.

புரசபாக்கம்.

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1893

உ

கடவுள் துணை.

மண்டலபுருடன் அருளிச்செய்த.

# பதினோராவது நிகண்டு.

மூலமும் உரையும்.

(*)

காப்பு.

முடிவிலின்பத்துமூவர் முதல்வனைப்போற்றிசெய்தே
அடிதொறுமிரண்டுமொன்று மாதியிற்பொருளடக்கி
நடைபெறுககரமாதி னகரவீரெதுகையாகப்
படியிலோர்சொற்பொருட்பல் விதத்தொகைபகரலுற்றும்

இதன்பொருள்.

முடிவில் அளவில்லாத, இன்பத்து - இன்பத்தையுடைய, மூவர்கொடாத-முதல்வனை, அருகக்கடவுளை-போற்றிசெய்து-துதிசெய்து, அடிதொறும் அடிகடோறும், இரண்டும்-இரண்டு சொல்லினும் ஒன்றும் ஒரு, சொல்லினும்-ஆதியில்-முதலில், பொருள்-பொருள்களை, அடக்கி- அமைத்து, நடைபெறு நடைபெற்றுவரும், ககரமாதி ககரவெதுகைமுதல் னகரவீரெதுகையாக - னகரவெதுகையிறுதியாக, படியில்-இவ்வுலகின்கண் ஓர்சொற்பொருள்பல்-விதத்தொகை, ஒருசொல்லலுற்றுமென்றவாறுயும் என்னமெழுவா யெஞ்சிநின்றது இதில்பகரலுற்றும் சயனிலைபல் விதத்தொகையை-செய்யப்படுபொருள்.

ககரவெதுகை.

விருத்தம்.

பசவனேசசன்மாயோன் பங்கயன்சினனேபுத்தன்
பகலேநாளொருமுகூர்த்தம் பகலவனடுவேதேசு
மகரமேசுறாப்பூந்தாதாம் வசிகூர்மைவசியம்வாளே
அகமனமனையேபாவ மகமிடமுள்ளுமாமே.

(இ-ள்) பகவனென்பது சிவனுக்கும்-திருமாலுக்கும்-பிரமனுக்கும்அருகனுக்கும்-புத்தனுக்கும்பெயர், பகலென்பது நாள், ஒருமுகூர்த்தகாலம் - சூரியன் நடு பிரகாசத்துக்கும்பெயர், மகரமென்பது சுறா பூந்தாதுக்கும்பெயர் வசியென்பது கூர்மை வசியம் வாளுக்கும் பெயர், அகமென்பது மனம்-வீடு பாவம்-இடம்-உள்ளுக்கும்பெயர்-எ-று. (க)

சிகரிகோபுரமேவெற்புச் சிறெலிநாரைகாற்பேர்
சிகழிகைமபி முடிப்பேர் சிறந்தவாசிகைசேதமாலை

சிகரமேமலையினுச்சி சிகைசென்னிதிவலைவெற்பாம்
மகம்யாகமோர்நாளென்பமாய்வென்பமறைவுஞ்சாவும்.

(இ-ள்) சிகரமென்பது கோபுரம் மலை நாரைக்கும்பெயர், சிகழியென்பது மயிர்முடி-கோத்தமாலை பூமாலைக்கும்பெயர், சிகரமென்பது மலையினுச்சி, அலை-தலை-துளி-மலைக்கும்பெயர் மகமென்பது யாகம்-ஓர் நட்சத்திரத்துக்கும்பெயர், மாய்வென்பது மறைவு சாவுக்கும்பெயர் எ-று. (௨)

இகல்பகைவலிபோர்முப்பே ரிகுளையேதோழிநட்பாம்
புகரென்பமழைக்கோள்குற்றம்புற்கெனுநிறமுமுப்பேர்
நகமலையுகிர்மரப்பேர் நகைமகிழ்வொளிசிறப்பாம்
ககனவிண்படைகாடென்பகடவுளேமுனிநன்மைப்பேர்.

(இ-ள்) இகலென்பது பகை - வலிமை-யுத்தத்திற்கும்பெயர், இகுளையென்பது தோழி-சினேகத்துக்கும்பெயர், புகரென்பதுசுக்கிரன்-குற்றம் கபிலநிறத்துக்கும்பெயர், நகமென்பதுமலைநகம் மரத்துக்கும்பெயர், நகையென்பது மகிட்சி பிரகாசம் சிறப்புக்கும்பெயர், ககனமென்பது ஆகாயம் சேனை-காட்டுக்கும்பெயர், கடவுளென்பது தெய்வம் முனிவன்நன்மைக்கும்பெயர் எ-று (௩)

சாகஞ்சாகினிவெள்ளாடு தேக்கெனுந்தருவேதேனீ
பாகலேகாரவல்லி பலாவென்றும்பகரலாமே
யூகமேகருங்குரங்கோ டப்பொருளுணர்தருக்கம்
நாகம்விண்குரங்குபுன்னை நாற்றுசுமலைபாம்பியானை.

(இ-ள்) சாகமென்பது சிறுகீரை வெள்ளாடு தேக்கமரம் தேனீக்கும்பெயர், பாகலென்பது பாகல் பலாமரத்திற்கும்பெயர், யூகமென்பது கருங்குரங்கு அகப்பொருளறிதல் தருக்கத்துக்கும்பெயர், நாகமென்பது ஆகாயம்-குரங்கு-புன்னைமரம் - நல்லாடை-மலைபாம்பு - யானைக்கும்பெயர்-எ-று. (௪)

திகிரியேமூங்கில்வட்டந் தேருருளாழிவெற்பாம்
சிகியென்பமஞ்ஞைதீயாந் தனுறுகேதுவும்பேர்
ஞெகிழியேசிலம்பினொடு நெருப்புறுகொள்ளிக்கும்பேர்
எகினமேபுளிமாநாளி கவரிமாநீர்நாயன்னம்.

(இ-ள்) திகிரியென்பது மூங்கில் வட்டவடிவு தேர் தேருருளை சக்கராயுதம் மலைக்கும்பெயர், சிகியென்பது மயில் நெருப்பு கேதுவெனுமோர் கோளுக்கும்பெயர், ஞெகிழியென்பது சிலம்பு நெருப்பு விறகுக்கும்பெயர் எகினமென்பது புளி மாமரம் நாய் கவரிமான் நீர்நாய் அன்னப்புள்ளுக்கும் பெயர் எ-று. (௫)

ஆகுவேயெலியினொடு மாம்பெருச்சாளிக்கும்பேர்
யோகமேதியானங்கூட்டமுபாயமாமுயர்ச்சிக்கும்பேர்
போகியிந்திரன்பாம்பென்ப போகில்புட்பெருதுப்பூமொட்டாம்
கோகிலங்குயில்பல்லிப்பேர்குடங்கரேகுடிசைகும்பம்.

(இ-ள்) ஆகுவென்பது எலி-பெருச்சாளிக்கும்பெயர், யோகமென்பது தியானம் கூட்டம் உபாயம் உயர்ச்சிக்கும்பெயர், போகியென்பதுதேவேந்திரன்-பாம்புக்கும்பெயர், கோகிலமென்பது பறவைப்பொது-பூவருந்புக்கும்பெயர் கோகிலமென்பது குயில்பல்லிக்கும்பெயர், குடங்கமென்பது குடிசைகுடத்துக்கும்பெயர்-எ-று. (௫)

பொகுட்டுத்தாமரைப்பூங்கொட்டை பொருப்புச்சேற்றெழுந்தகொப்புள், இகுத்தலேசெகுத்தல்வீழ்த்தலிரித்தலோடழைத்தலீதல் புகைக்கிடுநாமந்தூமம் போற்றும்யோசனைக்கும்பேரோ, அகைத்தல்வேதனையொடித்தலறுந்திடலுயர்த்தலாமே.

(இ-ள்) பொகுட்டென்பது தாமரைக்கொட்டை மலைச்சேற்றிலெழுங்குமிழிக்கும்பெயர், இகுத்தலென்பது கொல்லுதல்-தள்ளுதல் - சாய்த்தல் அழைத்தல்-கொடுத்தலுக்கும்பெயர், தூமமென்பது புகையோசனைதூரத்துக்கும்பெயர், அகைத்தலென்பதுவருத்தம் முறித்தல் அறுத்தல் உயர்த்தலுக்கும்பெயர் எ-று. (௬)

சிக்கமேகுடுமிநாமஞ் சிப்புடனுறியுமேற்கும்
கொக்குமாமரமேசெந்நாய் குரண்டமேகுதிரைமூலம்
வக்கிரங்கோடுமைமீளான் மடங்குதலுடனேவட்டம்
சக்கிரிகுயவன்செக்கான் றராபதிநெடுமால்பாம்பு.

(இ-ள்) சிக்கமென்பது குடுமி சிப்பு-உறிக்கும்பெயர் கொக்கென்பது மாமரம் செந்நாய்க்கும் குதிரைமூலநட்சத்திரத்துக்கும்பெயர், வக்கிரமென்பது கோடு மீளுதல்-மடங்குதல்வட்டத்துக்கும்பெயர் சக்கிரியென்பது குயவன்-செக்கான்-அரசன் திருமால்-பாம்புக்கும்பெயர்-எ-று. (௭)

தூக்கென்பபாட்டுங்கூத்துந் துலாமுமாராய்தலும்பேர்
பாக்கென்பதெதிர்காலத்தைப்பகரிடைச்சொற்றுவர்க்காய்
மேக்குமேற்றிசைமேலும்பேர் மெய்யுண்மையுடலுமாமே
ஊக்கமேவலியுற்சாக முள்ளத்தின்மிகுதிக்கும்பேர்.

(இ-ள்) தூக்கென்பது செய்யுள்-கூத்து நாறுபலம் ஆராய்தலுக்கும்பெயர் பாக்கென்பது எதிர்காலவிடைச்சொல்பாக்குக்கும்பெயர், மேக்கென்பது மேற்றிசை-மேலுக்கும்பெயர், மெய்யென்பது நிசம் சரீரத்துக்கும்பெயர், ஊக்கமென்பது-வலிமைஉற்சாகம் உள்ளக்கிளர்ச்சிக்கும்பெயர்-எ-று. (௮)

பகடிபம்பெருமையெருது பஃறியாண்மேதியம்பேர்
தகடிலையம்மையென்ப தபனனேயிரவிதீயாம்
அகடென்பநடுவேகுக்கி அருளென்பகருணைசத்தி
மகரந்தங்கள்ளுந்தேனும்மலர்த்தாதும்வழங்குமப்பேர்.

(இ-ள்) பகடென்பது யானை பெருமை-எருது-ஓடம் - எருமைக்கடாவுக்கும்பெயர், தகடென்பது இலை-அச்சவடிவுக்கும்பெயர், தபனனென்பதுசூரியன் நெருப்புக்கும்பெயர் அகடென்பது நடுவயிறுக்கும்பெயர்

அருளென்பது கிருபை சிவசத்திக்கும்பெயர், மகரந்தமென்பதுகள் தேன்பூந்தாதுக்கும்பெயர்-எ-று. ௰

சகுந்தம்புட்பொதுநீள்பூகம் சடையென்பவேணிவேராம்
சிகண்டியேபாலையாழின் றிறத்திசைமயிலொலிப்பேர்
சகுனிபுண்ணிமித்தம் பார்ப்போன்சமமென்பதமரொப்பாகும்
சகுனமேகிழங்குபுள்ளின் சாதியுநிமித்தமும்பேர்

(இ-ள்) சகுந்தமென்பது பறவைப்பொது கழுகுக்கும்பெயர், சடையென்பது சடைவேருக்கும்பெயர், சிகண்டியென்பது பாலையாழ்ன்றிறத்தோரிசை மயில் பேடிக்கும்பெயர், சகுனியென்பது பறவை சகுனம்பார்ப்பவனுக்கும்பெயர், சமமென்பது யுத்தம் நடுஉவமைக்கும்பெயர், சகுனமென்பது கிழங்குபறவைச்சாதி-சகுனத்துக்கும்பெயர் எ-று. ௰௧

சக்கரம்பெருமையோர்புட்டரணியேபிறப்புவட்டம்
மிக்கதேருருளையாழி வரையெனவிளம்புமென்பேர்
பக்கம்புட்சிறகூட்டுப் பகர்திதியருகுமாகும்
நக்கனேயருகன்சம்பு நிருவாணிநாட்டும்பேர்

(இ-ள் சக்கரமென்பது பெருமை ஓர்-பறவைபூமி பிறப்புவட்டவடிவு-தேருருளை-கடல்மலைக்கும்பெயர், பக்கமென்பது பறவையினிறகு சினேகம்பிரதமை முதலியதிதி பக்கத்துக்கும்பெயர், நக்கனென்பது அருகன்-சிவன்-திகம்பரனுக்கும்பெயர்-எ-று. ௰௨

பூகமேதிரளைபூகம் புன்கணென்பதுநோய்துன்பம்
வாகுவேயழகுதோளாம் வாசியே மகமோர்மாதம்
பாகுமேபிச்சைபங்காம் பயோதரம்புயலேகொங்கை
வாகைபண்பொழுக்கம் வெற்றிதவந்தொழில்வழங்கன்மிக்காம்.

இ-ள் பூகமென்பது திரண்டவடிவு கமுகுமரத்திற்கும்பெயர், புன்கணென்பது வியாதி-துன்பத்துக்கும்பெயர், வாகுவென்பது அழகுபுயத்திற்கும்பெயர், பாகமென்பது மகநட்சத்திரம் - ஓர்மாதத்துக்கும்பெயர், பாகுவென்பது பிச்சைபங்குக்கும்பெயர், பயோதரமென்பது மேகம்முலைக்கும்பெயர், வாகையென்பது குணம் ஒழுக்கம் விசயம் தவம்-வேலைகொடுத்தல்மிகுதிக்கும்பெயர்-எ-று. ௰௩

நோக்கென்பதழகுபார்வை நுதலென்பபுருவநெற்றி
சேக்கையேமிருகந்துஞ்சு மிடமுலைசிறந்தபாயல்
பூக்கமேகமுகூரென்ப புகலிகந்திப்பொழிலூர்ப்புள்ளாம்
ஆக்கம்பூமகள்செல்வப்பேர் அறல்கருமணனீராமே

இ-ள் நோக்கமென்பது அழகு-கண்ணுக்கும்பெயர், நுதலென்பது புருவம்நெற்றிக்கும்பெயர், சேக்கையென்பது விலங்கின்-படுக்கையிடம்-முலைபாயலுக்கும்பெயர், பூக்கமென்பது கமுகமரம் ஊர்க்கும்பெயர், புலிகமென்பது நெருப்புப்பொறி - ஊர்க்குருவிக்கும்பெயர், ஆக்கமென்பது

இலக்குமி செல்வத்துக்கும்பெயர், அறலென்பது கருமணல் - நீருக்கும் பெயர்-எ-று. ௬௪

சீகரங்கரகம்வீசுங் கவரியுந்திவலையும்பேர்
சாகரந்துயிலொழித்தல் சமுத்திரமிருபேர்சாற்றும்
காகுளிதவிசுகண்டத் தெழுமொலியிசையுங்காட்டும்
ஈகைபொன்கொடையிண்டைப்பேர் இரவிமேமலையாதித்தன்

இ-ள் சீகரமென்பது கரகம் சாமரம்-துளிக்கும்பெயர், சாகரமென்பது நித்திரையொழிப்பு கடலுக்கும்பெயர், காகுளியென்பது பொன்கொடுத்தல்-இண்டாய்கொடிக்கும்பெயர், இரவியென்பது மலை-சூரியனுக்கும்பெயர்-எ-று. ௬௫

தகையென்பதழகுபண்பு தயையொடுபெருமைகாற்பேர்
அகியென்பதரவிரும்பாம் அரிட்டமேகள்ளிக்காக்கை
ககமென்பதம்புபுள்ளாம் கடுத்தலொப்பைசந்தேகம்
அகவல்பாமயிற்குரல்கூத்தந் தந்தமேயழகீறென்ப

இ-ள் தகையென்பது அழகு குணம் அன்பு-பெருமைக்கும்பெயர், அகியென்பது பாம்பு இரும்புக்கும்பெயர், அரிட்டமென்பது கள்காக்கைக்கும்பெயர், ககமென்பது அம்பு-பறவைக்கும்பெயர், கடுத்தலென்பது உவமை-சந்தேகம், சீக்கிரத்திற்கும்பெயர், அகவலென்பது ஓர்பா-மயிலொலி-ஆடலுக்கும்பெயர், அந்தமென்பது அழகுமுடிவுக்கும்பெயர் எ-று.

அக்கென்பரிடைமுறிப்பு மணிசங்குமணியுமாகும்
நக்கலேநகையுண்டற்பேர் ஞாட்பமர்பாரங்கூட்டம்
இக்கென்பகரும்புகள்ளாம் ஈரமேகுளிர்ச்சியன்பு
மக்களேமானிடர்சிறுர்பேர் வனாதலேகொள்ளல்நீக்கல்.

இ-ள். அக்கமென்பது இடபத்தின்-முரிப்புசங்கு மணிக்கும்பெயர் நக்கலென்பது சிரிப்பு-புசித்தலுக்கும்பெயர், ஞாட்பென்பது யுத்தம்-கனம் கூட்டத்துக்கும்பெயர், இக்கென்பது கரும்பு கள்ளுக்கும்பெயர், ஈரமென்பது குளிர்ச்சி-அன்புக்கும்பெயர், மக்களென்பது மனிதர் பிள்ளைகட்கும்பெயர், வனாதலென்பது கொள்ளுதல் - தள்ளுதலுக்கும் பெயர் எ-று. ௬௭

கேகயமஞ்ஞையோர்பண்ணகணமாக்கிளத்துமுபபேர், தோகையே மயில்வாள்மஞ்ஞைவிலங்கின்வான் சொல்லுமுப்பேர் போகமேபாம்பின் மெய்யும்போகத்தின்விகர்ப்பமாகும், போருகநெடுமைநேர்மைபோருக லெனுமுப்பேரே.

இ-ள் கேகயமென்பது மயில் ஓர்பண்-அசுப்புள்ளுக்கும்பெயர், தோகையென்பது மயில்வால்-மயில் மிருகத்தின்-வாலுக்கும்பெயர் போகமென்பது பாம்பினுடல் போகத்தின்வேறுபாட்டுக்கும்பெயர், போருகலென்பது நீளம் நேர்மை போருகலுக்கும்பெயர் எ-று. ௬௮

கைக்கிளேயிசைவிகற்ப மொருதலைக்காமமும்பேர்
சுக்கைதாரகைமாலைப்பேர் சூத்திரம்பொறிநூனூறபார்
எக்கரேசொரிதலேடு குவிதலுமிருபேரொன்ப
மொக்குளேகுமிழிப்பூவின் முகுளெனமொழியலாமே.

இ-ள் கைக்கிளையென்பது இராகத்தின்வேறுபாடுஒருதலைக்காமத்துக்கும்பெயர், சுக்கையென்பது நட்சத்திரம் - பூமாலைக்கும்பெயர், சூத்திரமென்பது இயந்திரம் பஞ்சிநூல்-இலக்கணச்சூத்திரத்துக்கும்பெயர்,யெக்கரென்பது சொரிதல்-குவிதலுக்கும்பெயர், மொக்குளென்பது நீர்க்குமிழி பூவரும்புக்கும்பெயர் எ-று. ௰கூ

ககரவெதுகை முற்றிற்று

ஙகரவெதுகை.

புங்கமேயுயர்ச்சியன்பு பொருமம்பிற்குதைமுப்பேரே
திங்களம்பிலிமாதர்பேர் சித்திரனேவன்றச்சன்
கங்கென்பவரம்பின்பக்கங் கருந்தினைபருந்துமாமே
கொங்கனேபீலிக்குஞ்சந்தூக்கொடுதொடுத்தமாலை.

இ-ள் புங்கமென்பது உயரம்-அம்பு-அம்புக்குதைக்கும்பெயர், திங்களென்பது சந்திரன்-மாதத்துக்கும்பெயர், சித்திரனென்பது சித்திரக்காரன்-தச்சனுக்கும்பெயர், கங்கென்பது வரம்பின்பக்கம் கருந்தினை பக்கம் வருந்தினை-பருந்துக்கும்பெயர், தொங்கலென்பதுபீலிக்குஞ்சம் தூக்குதொடுத்தமாலைக்கும்பெயர் எ-று. உ௰

சங்கமேகணைக்காலோரொண் கவைசங்குபுலவர்நெற்றி
பங்கென்பமுடமேயாகும் பாதியுஞ்சனியமேற்கும்
வங்கமேவெள்ளிநாவாய் வழுதலைஈயமாமே
அங்கணஞ்சேறுமுற்ற மாஞ்சலதாரைக்கும்பேர்.

இ-ள் சங்கமென்பது கணைக்கால்-ஓரிலக்கம் கூட்டம்-சங்குபுலவர்நெற்றிக்கும்பேர், பங்கமென்பது முடம்-வியாதி சனிக்கும்பெயர், வங்கமென்பது வெள்ளிமரக்கலம்-வழுதலை ஈயத்துக்கும்பெயர், அங்கணமென்பது சேறு முற்றில் சலதாரைக்கும்பெயர்-எ-று. உக

ஞாங்கர்வேல்பக்கமுன்புமேலெனநான்குமாகும்
தூங்கலேகிறுத்தம்யானை துயில்சோம்புதராசுதாழ்தல்
வாங்கலேவளைத்தல்கொள்ளல்வைவென்பகூர்மைவைக்கோ
வேங்கைபொன்புலிமரப்பேர்வீநீக்கம்பூப்புட்சாவாம்.

இ-ள் ஞாங்கரென்பது வேலாயுதம் பக்கம் முன்புமேலுக்கும்பெயர், தூங்கலென்பது கூத்து - யானை - நித்திரைசோம்பல் தராசுதாழ்தலுக்கும்பெயர், வாங்கலென்பது வளைத்தல் கொள்ளுத

லுக்கும்பெயர் வையென்பதுகூர்மைவைக்கோலுக்கும்பெயர் வேகையெ ன்பது) பொன் புலி-ஓர்மரத்துக்கும்பெயர்,(வீயென்பது) நீக்கம் மலர்-ப றவை-சாவுக்கும்பெயர் எ-று. (௨௨)

மங்குல்காரிருள்விண்மும்பேர்மருந்தமுதொடுமருந்தாம்
பங்கியேபிறமயிர்க்கும் பகருமாலவையிக்கும்பேராம்
அங்கதம்பன்னகந்தோளணியுடன்வசைச்சொல்லாகும்
பங்கமேசேறு தூசு பழுதொடுசின்னமாமே

(இ-ள்.) (மங்குலென்பது) மேகம் இருள் ஆகாயத்துக்கும்பெயர் (மரு ந்தென்பது) அமுதம்-மருந்துக்கும்பெயர், (பங்கியென்பது) பிறமயிர் கு டுமிக்கும்பெயர், (அங்கதமென்பது) பாம்பு-வாகுவலயம் வசைச்சொல் லுக்கும்பெயர் பங்கமென்பது) சேறு வஸ்திரம் குற்றம்-வேறுபாட்டுக் கும்பெயர் எ-று. (௨௩)

அங்கமேயுடலுறுப்பென் பாறங்கங்கட்டிலும்பேர்
பிங்கலம்பொன்னும்பொன்னி னிறத்தையும்பேசலாகும்
பொங்கரோமரத்தின்கோடு பொருப்புயரிலவுமப்பேர்
பொங்கலேகொதித்தன்மிக்காம் பொச்சாப்புமறவிதாம்.

(இ-ள்) (அங்கமென்பது) உடல்-அவயம்-எலும்பு வேதாங்கம் கட்டி லுக்கும்பெயர், (பிங்கலமென்பது) பொன் - பொன்னிறத்துக்கும்பெயர் பொங்கரென்பது மரக்கொம்பு மலை-இலவமரத்துக்கும்பெயர் பொங்கலெ ன்பது) பொங்குதல்-மிகுதிக்கும்பெயர் (பொச்சாப்பென்பது)மறதிபொ ல்லாங்குக்கும்பெயர்-எ-று. (௨௪)

ஙகரவெதுகை முற்றிற்று.

சகரவெதுகை.

பாசனமென்பகுற்றம் பாண்டமுண்கலமும் பன்னும்
வாசமேயிருப்பிடம்பூ மணம்புள்ளின்சிறகுதூசாம்
கோசமேமதிலுறுப்பாண் குறிமுட்டைமுறபண்டாரம்
தேசிகன்வணிகன்றேசாந் தரியொடுகுருவுமாமே

(இ-ள்) (பாசனமென்பது) உறவு-பாத்திரம் உண்கலத்துக்கும்பெயர், (வாசமென்பது) இருப்பிடம் பூமணம்-பறவையினிறகு-வஸ்திரத்திற்கு ம்பெயர், (கோசமென்பது) மதிலுறுப்பு ஆண்குறிமுட்டை - புத்தகம் பொக்கிஷத்துக்கும்பெயர், (தேசிகனென்பது) செட்டி தேசாந்திரி-குரு வுக்கும்பெயர் எ-று. (௨௫)

மூசன்மெய்த்திடல்சாவென்ப முடலையேதிரட்சியுண்டை
கீசகங்குரங்குவேயாங் கேழ்திறமொளியொப்பாகும்
வீசலேயெறிதலீவாம் வெம்மையுட்டணம்விருப்பம்
கேசரமகிழ்பூந்தாதாங் கிருட்டியோரின்றுப்பன்றி.

(இ-ள்) (மூசவென்பது) மொய்த்தல்-சாவுக்கும்பெயர், முடலையென்பது திரண்டவடிவு-உருண்டவடிவுக்கும்பெயர் (கீசகமென்பது)குரங்கு மூங்கிலுக்கும்பெயர், (கேழென்பது)நிறம் பிரகாசம்-ஒப்புக்கும்பெயர், (வீசலென்பது எறிதல் கொடுத்தலுக்கும்பெயர் (வெம்மையென்பது) வெப்பம்-ஆசைக்கும்பெயர் (கேசரமென்பது) மகிழமரம்பூந்தாதுக்கும் பெயர்(கிருட்டியென்பது)தலையீற்றுப்பசுபன்றிக்கும்பெயர்-எ-று.

அசிபடைக்கலமேவாளே யவமதிச்சிரிப்புமுப்பேர்
நிசியிராமஞ்சள்பொன்னும் நீர்புனல்குணம்பூராடம்
பிசியென்பபொய்யுஞ்சோறும் பேசரும்பொருளுமுப்பேர்
சுசிகோடைசுத்தந்தீயாஞ் சுடர்விளக்கிரவியங்கி

(இ-ள்) (அசியென்பது) ஆயுதம் வாள்-அவமதிச்சிரிப்புக்கும்பெயர், (நிசியென்பது) இரவு-மஞ்சள்-பொன்னுக்கும்பெயர், (நீரென்பது)சலம் பண்பு-பூராடநட்சத்திரத்துக்கும்பெயர், பிசியென்பதுபொய்-சோறு-அரும்பொருளுக்கும்பெயர், சுசியென்பது கோடைகாலம்-சுத்தம் நெருப்புக்கும்பெயர்,சுடரென்பதுவிளக்கு-சூரியன் நெருப்புக்கும்பெயர்-எ-று.

ஆசென்பவிரைவுகுற்ற மற்பமெய்க்கவசநாற்பேர்
காசென்பகோழைகுற்றங் கதிர்விடுமணிமுப்பேரோ
ஆசினிபலாவிசேட மரவுரிமரக்காழ்விண்ணும்
தேசிகமழகுகாந்திதிசைச்சொல்வோர்கூத்துச்செம்பொன்

(இ-ள்) (ஆசென்பது) சீக்கிரம் குற்றம்-சிறுமை-மெய்யக்க வசத்துக்கும்பெயர், (காசென்பது கோழை-குற்றம் இரத்தினத்துக்கும்பெயர், (ஆசினியென்பது) ஈரப்பலா மரவுரி-மரவயிரம் ஆகாயத்துக்கும்பெயர், (தேசிகமென்பது) அழகு ஒளி அவ்வவ்நாட்டுச்சொல்-ஓர்கூத்து- செம்பொன்னுக்கும்பெயர்-எ-று. (உஅ)

பச்சையேமாகதந்தோல் பரிமளம்புதன்மால்பூந்தி
கச்சையென்பதுதழும்பு கயிறுடுகவசமுப்பேர்
செச்சைமைவெட்சிதேய்வைதிசையென்பதிசைசுணங்காம்
இச்சையேபொய்த்தலாகுமிடித்தலுஞ்ஞானமுப்பேர்

(இ-ள்) (பச்சையென்பது) மரகதம் தோல்-ஓர்வாசனைப்புல் - திருமால்-புதனுக்கும்பெயர், (கச்சையென்பது) உடற்றழும்பு கயிறு கவசத்து

க்கும்பெயர், (செச்சையென்பது) திசை தேமலுக்கும்பெயர், (இச்சை யென்பது) பொய்-தரித்திரம்-அறிவில்லாமைக்கும் பெயர்-எ-று. (உ௬)

பிச்சமான்மயிரும்பீலிக்குடையும்வெண்குடையுமாகும்
கச்சம்யானைக்கழுத்திற் கயிறளவொடுமரக்கால்
எச்சமேகுறைசேயாகம் இபமென்பமரக்கோடியானை
அச்சமேசயத்தியம்மை யஞ்சலிம்மூப்பேராமே.

(இ-ள்)(பிச்சமென்பது குடுமி பீலிக்குடை-வெள்ளைக்குடைக்கும்பெயர்(கச்சமென்பது) யானைக்கழுத்திடு-கயிறு-அளவுமரக்காலுக்கும்பெயர், (இபமென்பது) மரக்கொம்பு யானைக்கும்பெயர்(அச்சமென்பது) அகத்திமரம்-அச்சவடிவு பயத்துக்கும்பெயர் எ-று. (௩௰)

ஆசையேதிசைபொன்னன்பா மாகுலம்வருந்தமோசை
காசையேகாயாநாணல் காமர்தானழகுகாதல்
பாசமேகயிறுசூளி பகருசித்துளையன்பாகும்
தூசென்பதாடையானைப் புரசைதூசிப்படைப்பேர்

(இ-ள்) (ஆசையென்பது) திக்கு-பொன்-இஷ்டத்துக்கும்பெயர் (ஆகுலமெனபது) வருத்தம்-சத்தத்துக்கும்பெயர், (காசையென்பது) காசாஞ்செடி-நாணற்புல்லுக்கும்பெர் (காமரென்பது) அழகு-ஆசைக்கும்பெயர் (தூசென்பது)புடவை-யானைப்புரசைபடைமுன்னணிக்கும்பெயர்-எ-று

தாசியேபரணிசூளை தளியென்பதுளியேகோயில்
வேசரிகழுதையேகோ வேறுவேசரியுமாகும்
ஆசுகம்பகழிகாற்றும் அந்திரியுமையேதுர்க்கை
கோசிகஞ்சாமவேதங் கூறுபட்டாடைக்கும்பேர்.

(இ-ள்) (தாசியென்பது) பரணிநட்சத்திரம்-அடியாளுக்கும்பெயர்,(தளியென்பது துளி கோயிலுக்கும்பெயர்,(வேசரியென்பது)கழுதை கோவேறுகழுதைக்கும்பெயர், (ஆசுகமென்பது) அம்புகாற்றுக்கும் பெயர், (அந்தரியென்பது) பார்வதி துர்க்கைக்கும்பெயர், (கோசிகமென்பது)சாமவேதம்-பட்டுவஸ்திரத்துக்கும் பெயர்-எ-று. (௩உ)

பசுவேறுசிவனுவாம் பாரதிவாணிதோணி
வசுவேயான்கன்றும்பொன்னும் வசுக்களுந்தீயுநற்பேர்
அசமூவாண்டுறுநெல்லாடாம்அணையென்பகணையேமெத்தை
சசியென்பகர்ப்பூரஞ்சந்திர னயிராணிமுப்பேர்.

(இ-ள்) (பசுவென்பது) இடபம்-உயிர பசுவுக்கும்பெயர்,(பாரதியென்பது) சரஸ்வதி தோணிக்கும்பெயர்,(வசுவென்பது)பசுவின்கன்று-பொ

ன்தேவர்களிலோர்பிரிவாகிய-அஷ்டவசுக்கள் நெருப்புக்கும்பெயர் (அசமென்பது) மூன்றுவருடத்துநெல்-ஆட்டுக்கும்பெயர், (அணையென்பது) கணை-மெத்தைக்கும்பெயர், (சசியென்பது) கர்ப்பூரம் சந்திரன் இந்திராணிக்கும்பெயர்-எ-று. (௩௩)

விசும்புபொன்னுலகுமேகம் விண்ணொடுதிசையுநாற்பேர்
தசும்புநற்குடமிடாவாஞ் சாத்தனேயருகனேயன்
இசைபுகழ்கிள்விமாட்டாம் ஏங்கலேயொலியிரங்கல்
பிசுனனேகோளன்பொய்ய னுலோபனும்பேசுமிப்பேர்

(இ-ள்) (விசும்பென்பது) தேவலோகம்-மேகம் ஆகாயம் திசைக்கும்பெயர், (தசும்பென்பது) குடம்மிடாவுக்கும்பெயர், (சாத்தனென்பது) அருகன்-அரிகரபுத்திரனுக்கும்பெயர், இசையென்பது) புகழ் சொல்-பாட்டுக்கும்பெயர், ஏங்கலென்பது) சத்தம் அழுதலுக்கும்பெயர் (பிசுனனென்பது) கோளன் பொய்யன்-உலுத்தனுக்கும்பெயர்-எ-று. (௩௪)

வச்சிரஞ்சதுக்கள்ளி வயிரமேகுலிசமுப்பேர்
நொச்சியேசிந்துவார மதில்சிற்றூர் நுவலலாமே
தச்சனேசித்திரைப்பேர் தபதியென்றுனுமாகும்
உச்சிநண்பகலுச்சிப்பேர் உறுப்பவயவமுடம்பாம்.

(இ-ள்) (வச்சிரமென்பது) சதுரக்கள்ளி வயிரம் வச்சிராயுதத்துக்கும்பெயர், (நொச்சியென்பது நொச்சிச்செடி மதில்- சிற்றூருக்கும்பெயர், (தச்சனென்பது) சித்திரைநக்ஷத்திரம் தச்சனுக்கும்பெயர் (உச்சியென்பது) நடுப்பகல்-உச்சந்தலைக்கும்பெயர் (உறுப்பென்பது) அவயம் - சரீரத்துக்கும்பெயர்-எ-று. (௩௫)

பாசென்பபசுமைமூங்கில் பப்பென்பபர்ப்போடொப்பாம்
மாசென்பசிறுமைகுற்றமழையழுக்கொடுநாற்பேரே
கேசம்வெண்வயிர்க்குமாண்பான் மயிருக்குங்கிளத்தலாகும்
வாசியேகுழன்முன்னுண்மாவா சியென்னேவனுற்பேர்.

(இ-ள்) (பாசென்பது) பசுமை-மூங்கிலுக்கும்பெயர் (பப்பென்பதுபரப்புலைப்புக்கும்பெயர், (மாசென்பது) அற்பகுற்றம்-மேகம்அழுக்குக்கும பெயா (கேசமென்பது) கூந்தல் குடுமிக்கும்பெயர், (வாசியென்பது) இசைக்குழல் - அச்சுவினிநட்சத்திரம் குதிரைவாசியென்னேவலுக்கும்பெயர் எ று. (௩௬)

மிசையென்பதுணவுமேடு மீமிசைச்சொல்லுமுப்பேர்
விசயமேவென்றிவெல்லம் வெங்கதிர்மண்டலப்பேர்
முசலியேயுடும்புதாழை முந்தியவிராமனேந்தி
வசதிநல்லிடமூர்விடாம் வர்ணயன்பரமனகாந்தன்.

(இ-ள்) (மிசையென்பது) உணவு மேடு மீமிசைச்சொல்லுக்கும்பெயர், (விசயமென்பது) வெற்றி-வெல்லம் சூரியமண்டலத்துக்கும்பெயர்(முசலியென்பது) உடும்புதாழை பலதேவன்லந்திக்கும்பெயர், (வசதியென்பது) நல்லிடபம் ஊர்-வீட்டுக்கும்பெயர், (வரனென்பது)பிரமன் சிவன் தலைவனுக்கும்பெயர் எ-று. (௬௭)

சகரவெதுகை-முற்றிற்று.

——(*)——

## ஞகரவெதுகை.

——(*)——

துஞ்சலேநிலைபெறுதுந் துயில்சோம்புசாவுமாகும்
பஞ்சரஞ்செருந்திகூடாம்பரதரேகழியார்நாய்கர்
கஞ்சமேதாளநகுல்லை கமலம்வெண்கலம்வட்டப்பம்
குஞ்சமீயோட்டிநாழிகுறள்குன்றிகுறளைச்சொல்லே.

(இ-ள்.)(துஞ்சலென்பது)நிலைபெறுதல்-நித்திரை சோம்பல்சாவுக்கும்பெயர்'(பஞ்சரமென்பது செருந்திமரம்-கூட்டுக்கும்பெயர்.(பரதமென்பது)நெய்தனிலமாக்கள்- செட்டிகளுக்கும்பெயர்.(கஞ்சமென்பது)தாளம்-கஞ்சா-தாமரை வெண்கலம் அப்பத்துக்கும்பெயர், (குஞ்சமென்பது)ஈயோட்டிநாழி-குறள்குன்றிக்கொடி குறளைச்சொல்லுக்கும்பெயர்-எ று.

நெஞ்சென்பமனமார்பின்பேர் நிழல்செல்வங்குளிர்ச்சிசாயை
மஞ்சுபூண்வலிமுனப்புமதயானைமுதுகிவ்வைந்தே
வஞ்சிமேற்செலவோரூர்பாவல்லியென்மரூங்கும்பெண்ணும்
தஞ்சமேயெளிமையென்பதருப்பற்றுக்கோடுமாமே.

(இ-ள்)(நெஞ்சென்பது) மனம் மார்புக்கும்பெயர்,நிழலென்பது)செலவம்-குளிர்ச்சிநிழலுக்கும்பெயர்.(மஞ்சென்பது)ஆபரணம்வலிமை அழகு-மேகம் யானைமுதுகுக்கும்பெயர், வஞ்சியென்பதுபகைவர்மேற்சொல்லுதல்-ஒரூர்.ஓர்பாஓர்கொடிபெண்ணுக்கும்பெயர், தஞ்சமென்பது எளிமை-பற்றுக்கோடுக்கும்பெயர் எ று. (௬௯)

அஞ்சனங்கறுப்புமைதிக்கானையிலொன்றுமப்பேர்
மஞ்சரியேபூங்கொத்துமாலைசெந்தளிருமாகும்
அஞ்சலிவணங்கல்வாவற்பறவையுமாகுமென்ப
இஞ்சியேபுரிசையிஞ்சி யெறுழென்பவலிதண்டாமே.

(இ-ள்)(அஞ்சனமென்பது)கறுப்புமை- மேற்றிசையானைக்கும்பெயர், (மஞ்சரியென்பது) பூங்கொத்து- பூமாலைதளிருக்கும்பெயர், (அஞ்சலி

யென்பது)தும்பிடல வாயும்பறவைக்கும்பெயர், (இஞ்சியென்பது)மதில்-இஞ்சிக்கும்பெயர் (எறுழென்பது) வலிமைதண்டாயுதத்துக் கும்பெயர்-எ-று. (௪௰)

கிஞ்சுகமுருக்குஞ்செம்மைகிருட்டினன்றன்மால்பார்த்தன்
கஞ்சனமேகண்ணடிகரிக்குருவிக்கும்பேரோ
பஞ்சமேசிறுமையைந்தாம் பகழியம்பிதன்குதைப்பேர்
வஞ்சனைமாயைபொய்யாம்மாயன்மால்கருநிறத்தோன்

(இ-ள்) கிஞ்சுகமென்பது முருக்கமரம் - சிவப்புக்கும்பெயர் கிருட்டினனென்பது கண்ணன் அருச்சுனனுக்கும்பெயர், கஞ்சனமென்பது கண்ணடிகரிக்குருவிக்கும்பெயர், பஞ்சமென்பது சிறுவிலைக்காலம்-ஐந்துக்கும்பெயர்,பகழியென்பது அம்பு-அம்புக்குதைக்கும்பெயர், வஞ்சனையென்பது மாயைபொய்க்கும்பெயர், மாயனென்பதுதிருமால் கருநிறத்தோனுக்கும்பெயரென்றவாறு. (௪௧)

குஞ்சியாண்மயிர்ப்புட்பார்ப்புக் குன்றிபின்விரன்முப்பேரோ
வஞ்சமேகபடம்வாளாம் மாயம்வஞ்சனைபொய்யென்ப
கஞ்சனே குற்றன்வேதன் களங்கந்தாளமுக்குக்குற்றம்
கஞ்சிகைசிவிகையகண்டைகட்டிடுதிரையுமாமே.

(இ-ள்) குஞ்சியென்பது குடுமி-பறவைக்குஞ்சு குன்றிப்புதருக்கும்பெயர், வஞ்சமென்பது கபடம்வாளாயுதத்துக்கும்பெயர், மாயமென்பது சூரியன் பிரமனுக்குபெயர், களங்கமென்பது அழுக்குகுற்றத்துக்கும்பெயர், கஞ்சிகையென்பது தண்டிகை வஸ்திரம்திரைச்சீலைக்கும்பெயர் என்றவாறு. (௪௨)

ஞகரவெதுகை-முற்றிற்று.

## டகரவெதுகை.

நடலைவஞ்சனைபொய்யென்ப நடுங்கியநுடக்கமும்பேர்
மடல்பனையேடுபோல்வமலரிதழோர்நூற்கும்பேர்
படர்நடைநினைப்புநோவாம்பகர்ந்திடில்வீரர்க்குபேர்
குடநர்பசுவோர்கூத்துக்கும்பமேசுரும்பின்கட்டி

(இ-ள்) நடலையென்பதுகபடம்பொய் அசைவுக்கும்பெயர்,மடலென்பது பனையேடு போல்வன-பூவிதழ் ஓர் பிரபந்தத்துக்கும்பெயர்,படரென்பது வழி நினைவு-துன்பம்-படைவீரர்க்கும்பெயர், குடமென்பது பட்டணம் பசு ஓர் கூத்துக்கும் வெல்லக்கட்டிக்கும்பெயர் எ-று. (௪௩)

மாடமேயுழுந்தோர்டில்லா மழையென்பகுளிர்ச்சிமேகம்
கூடமின்மறைவுகொல்லன் சம்மட்டிகுவட்டினுச்சி
சேடனூர்சாதிபாய்கன் செகந்தாங்குமனந்தன்பாம்பும்
கேடகம்பரிசைவேறோர் கேடிலூர்பலகைமுப்பேர்.

(இ-ள்) மாடமென்பது உழுந்து-வீட்டுக்கும்பெயர், மழையென்பது குளிர்ச்சி மேகத்துக்கும்பெயர், கூடமென்பதுவீடு மறைவு-கொல்லன் சம்மட்டி-மலைவினுச்சிக்கும்பெயர், சேடனென்பதுவோர்சாதியான்-தோழன் பூமிதாங்குமனந்தனென்னும்பாம்புக்கும்பெயர் சேடகமென்பதுதோற்பலகை, ஊர்சேடகத்துக்கும்பெயர்-எ-று. (சச)

இடங்கரேமுதலைநார்த்தர் குடங்கரிம்முப்பேரென்ப
முடங்கலேமடங்கல்கைதைமூங்கிலேயோலையைம்பேர்
படங்குமேற்கட்டியென்ப பகர்பெருங்கொடியுமாகும்
விடங்கமேற்சொடிகொடுங்கை மிதுவையேப்பதுஞ்சோறும்.

(இ-ள்) இடங்கரென்பது முதலை-விடாகுடத்துக்கும்பெயர், முடங்கலென்பது மடங்குதல்-தாழை-மூங்கில் வியாதி ஓலைக்கும்பெயர், படங்கென்பது மேற்கட்டி பெருங்கொடிக்கும்பெயர், விடங்கமென்பது அழகு துகிற்கொடி - கொடுங்கைக்கும்பெயர், மிதுவையென்பது தெப்பம் சோற்றுக்கும்பெயர்-எ-று. (சரு)

குடிஞைபுட்பொதுவும்யாறுங் கூகையுமாகுமென்ப
தடிவயலுலக்கைவில்லுந் தண்டுமின்றசையுடும்பாம்
தொடிவளையொருபலப்பேர் சூழ்ந்தகங்கணமுமாகும்
மடியலங்குதலேசெம்பு வயிறுநோய்புடைவைதாழை.

(இ-ள்) குடிஞையென்பதுபறவைப்பொது நதிகேட்டானுக்கும்பெயர் தடியென்பது கழனி-உலக்கை வில்லு-தண்டாயுதம் மின்னல் தசைஉடும்புக்கும்பெயர், தொடியென்பது கைவளை ஒருபலம் கங்கணத்துக்கும் பெயர், மடியென்பது அடங்குதல்-சோம்பல்-வயிறுவியாதி-புடைவை தாழைக்கும்பெயர்-எ-று. (சசு)

வடிவமேவடிவநோன்பாம் பந்தமேகிளையுங்கட்டும்
வெடியச்சம்பரிமளிக்கு வெண்புகைவெளியுமுப்பேர்
துடியேலம்பறைகாலப்பேர் தூத்தாய்தூண்பத்துக்கோடாம்
வெடிறுபூசங்கறுப்பாம்குரவையேகடலோர்கூத்து.

(இ-ள்) வடிவமென்பது உருவம்-நோன்புக்கும்பெயர், பந்தமென்பது உறவு கட்டுக்கும்பெயர், வெடியென்பது மயக்கமும்-புகை வெளிக்கு

பட்டமேயோடைதூசுபதவிவாள்கவரிமாவாம்
புட்டமேகாகமாகும்புடைவையுநிறைவுமப்பேர்
குட்டமேதொழுநோயாழங்குளமெனப்பெயர்முப்பாற்றே
வட்டமேபரிசைநீர்ச்சால் வலயங்கைம்மணிதூசுர்கோள்.

இ-ள் பட்டமென்பது குளம்-வஸ்திரம்-பதவி-வாள் - கவரிமாவுக்கும் பெயர், புட்டமென்பது காக்கை சீலை-நிறைவுக்கும்பெயர், குட்டமென்பது குஷ்டவியாதி ஆழம் குளத்துக்கும்பெயர், வட்டமென்பது கேடகம் நீர்ச்சால்-வட்டவடிவு-கைம்மணி- சீலை-பரிவேடத்துக்கும்பெயர்-எ-று.

திட்டையேயுரலுமேடுந்திண்ணையுநண்ணுமுப்பேர்
தட்டைவேய்தினைத்தாள்கிள்ளை தனைக்கடிகோலேழுண்டம்
கிட்டியேதலையிற்றுவாங்கிருட்டியுந்தாளமுப்பேர்
கட்டளைநிறைகளொப்பே யிட்டிகையியற்றலாமே.

இ-ள் திட்டையென்பது உரல்-மேடு-திண்ணைக்கும்பெயர்; தட்டையென்பது மூங்கில்-தினைத்தாள்-கிளி-கடிகோல் - மேகவட்டைக்கும்பெயர், கிட்டியென்பது-தலையிற்றுப்பசுபன்றி தாளத்துக்கும்பெயர், கட்டளையென்பது-நிறைவுநிகருவி - உமைபொங்கலியற்றுக்குங்கருவிஉறையறிகருவிக்கும்பெயர்-எ-று. ௫௬

நாட்டங்கண்ணோர்பண்வாளாம் நாகுசங்கிளமைநத்தை
ஒட்டமேலுதடேதோல்வி உயிரொன்பகாற்றேசீவன்
கோட்டங்கோண்படப்பைநாடு கோயிலௌவியமான்கொட்டில்
தோட்டியங்குசங்கபாடந் துணையென்பதளவுமொப்பு.

இ-ள் நாட்டமென்பது கண்-ஓர்-பண் - வாளாயுதத்துக்கும்பெயர், நாகென்பது-சங்கு-இளமை-நத்தைக்குப்பெயர், ஒட்டகமென்பது-மேலுதடுதோற்றலுக்கும்பெயர்-உயிரென்பது காற்று-சீவனுக்கும்பெயர் கோட்டமென்பது கோணல்மருதநிலத்தூர்-நாடு கோயில் - அழுக்காறு-தொழுவத்துக்கும்பெயர், தோட்டியென்பது யானைத்தோட்டி கதவுக்கும்பெயர், துணையென்பது-அளவு,ஒப்புக்கும்பெயர்-எ-று. ௫௭

தடமலைபெருமைகோணஞ்சரிகரையகலம்வாவி
அடல்கொலைவலிபோராகும்அருத்தமேபொருள்பொன்பாகும்
உடல்பொருளாகமென்ப வோங்கல்வெற்புயரமூங்கில்
விடபமேயிடபராசிவிடைமரக்கொம்புமுப்பேர்.

இ-ள் தடமென்பது மலை-பெருமை- வளைவு-வழி-குளக்கரை - அகலம் குளத்துக்கும்பெயர், அடலென்பது-கொல்லுதல் - வல்லமையுத்தத்துக்

கும்பெயர் அருத்தமென்பது சொற்பொருள்-பொன் பாதிக்கும் - பெயர், உடலென்பது பொன்-உடலுக்கும்பெயர், ஓங்கலென்பது மலை-உயர்ச்சி மூங்கிலுக்கும்பெயர், விடமென்பது இடபவிராசி-மரக்கொப்புக்கும்பெயர்-எ-று. ௫௮

கடகமேசேனைவட்டங் கைவளைமதிற்பேரே
வடகந்தோலத்தவாளாம்வலமென்பதிடமேவெற்றி
படுவிகள்விற்பாள்குணடம் பரமென்பகவசமெய்யாம்
நொடிபிதிர்கிளவியாகும்நானநிச்சயமேகுன்றல்.

இ-ள் கடகமென்பது சேனை வட்டவடிவு-கைவளை மதிலுக்கும்பெயர் வடகமென்பது தோல் உல்லாசத்துக்கும்பெயர், வலமென்பது - இடம் வெற்புக்கும்பெயர்; படுவியென்பது கள்விற்பவள்-வசவிக்கும்பெயர், பரமென்பது கவசம்-சரீரத்துக்கும்பெயர், நொடியென்பது கைந்நொடி சொல்லுக்கும்பெயர், நாணமென்பதுநிச்சயம்-குறைதலுக்கும்பெயர் எ.

கடங்கயிறுவாக்கதுப்புக் கான்சுரமுடம்புநீதி
குடங்கடாநீமம்யானைக் குழாங்கடன்முழவைந்தேழாம்
மடங்கலேயசனிசிய மறலிகோயுகமுறித்தீ
படங்கரிமுகபடாகற்றுகில்பாம்பின்பணமுப்பேரே.

இ-ள் கடந்தென்பதுகயிறு-யானைக்கடவுள்-காடு-அருநெறிசரீரம்நியாயம் குடம் யானைமதம்-சுடலை-யானைக்கூட்டம்-கடன் குடமுழாவுக்கும் பெயர்-மடங்கலென்பது இடி-சிங்கம்-இயமன்வியாதி யுகம்-வடவாமுகாக்கினிக்கும்பெயர், படமென்பது யானைமுகபடாம்-வஸ்திரம்-பாம்பின்படத்துக்கும்பெயர்-எ-று. ௬௰

ஆடலேபெண்ணான்கூடல் வார்த்தைகூர்த்தமரோவெற்றி
பாடலஞ்சிவப்பினோடு பாதிரிகுதிரைமுப்பேர்
கோடரங்குரங்குசோலை கொம்பொடுகுதிரையாகும்
ஆடவர்புருடர்நாமமாமிளையவர்க்கும்பேரே,

இ-ள் ஆடலென்பது பெண்ணான்கூடல் வார்த்தை - கூத்தாடல்வெற்றிக்கும்பெயர், பாடலென்பது சிவப்பு பாதிரிமரம்-குதிரைக்கும்பெயர், கோடரமென்பது குரங்கு சோலைமரக்கொம்பு குதிரைக்கும்பெயர், ஆடவனென்பது ஆண்மக்கள் இளைஞருக்கும்பெயர்-எ-று. ௬௧

கடிமணம்விரைவுகூர்மை காலம்பேய்விளக்கங்காப்பு
வடிவச்சம்வாசமையம் வரைவுமிம்மிதமேபூரும்
வடிகோதிந்தளராகப்பேர்மருதாற்றிறனுமாமே
வடலைவழியகுதிரைப்பெட்டைபுவாய்பிடிவடவைத்தீயாம்

படலிகைபீர்க்குவட்டம்பரந்தகைம்மணிபூந்தட்டாம்
கொடியனேகொடியன்கேது குண்டாழந்தாழ்வாண்மாவே
கொடுவெண்பமருதப்பூமி தோட்டங்கைதவமும்பேரோ
முடிமயிர்முடியேசென்னி மகுடமுமொழியலாமே.

இ-ள் படலிகையென்பது பீர்க்குவட்டவடிவுகைம் மணிபூந்தட்டிர்கும்பெயர்கொடியென்பது துன்மார்க்கன் கேதுவெனும் பாம்புக்கும்பெயர் குண்டென்பதுஆழம் தாழ்வு-ஆண்குதிரைக்கும்பெயர் தொடுவென்பது மருதநிலம்தோட்டம் வஞ்சகத்துக்கும்பெயர், முடியென்பது-மயிர்முடிகலைகிரீடத்துக்கும்பெயர்-எ-று. எய

ஆடகந்துவரைபொன்னும் அஞரறிவிலரோதுக்கம்
கோடகமுடியுறுப்புங் குதிரையும்புதுமையும்பேர்
பீடிகையாவணம்பூந் தட்டொடுபீடமும்பேர்
தோடுபூவிதழேபெண்ணை மடல்போல்வதொகுதிக்கும்பேர்

இ-ள் ஆடகமென்பது துவரை-பொன்னுக்கும்பெயர் - அஞரென்பது அறிவிலார் துயரத்துக்கும்பெயர், கோடகமென்பது முடியுறுப்பு-குதிரை புதுமைக்கும்பெயர், பீடிகையென்பது கடைவீதி-பூந்தட்டு-ஆசனத்துக்கும்பெயர், தோடென்பது-பூவினிதழ்பனையேடுபோல்வன கூட்டத்துக்கும்பெயர்-எ று எக

அடரென்பநெருங்குதற்பேரைம்மையின்வடிவுமாகும்
விடர்முனிவிருப்புத்தூர்த்தர் கசுமர்வெற்பின்முழைகாடைம்பேர்
விடலையேதலைவன்பேடும் விறலோன்றன்பேருமாகும்
அடிசெண்டுவெளிதாளாதி கவிதையின்பாதமாமே.

இ-ள் அடரென்பது நெருங்குதல் அச்சவடிவுக்கும்பெயர். விடரென்பது முனிவரிருப்பிடம் தூர்த்தர்-வெடிப்பு மலைப்பிளப்புகாட்டுக்கும்பெயர் விடலையென்பது பாலைநிலத்தலைவன் வெற்றியாளனுக்கும்பெயர், அடியென்பதுகுதிரை வையாளி-வீதிகால்முதல்பாட்டினடிக்கும்பெயர் எ.

டகரவெதுகை-முற்றிற்று.



## ணகரவெதுகை.



புணர்வுதோய்க்கிடலிசைப்பாம் பொழில்புவிபெருமைசோலை
உணர்வென்பதெளிவேயூடல் ஒழிதலேயறிவுமாகும்
குணமென்பகயிறுபண்பு கும்பம்வின்னாணிநாற்பேர்
கணமுடுநோய்திரட்சிகாலநுட்பம்போவட்டம்.

இ-ள் புணர்வென்பது கல்வி-இசைப்புக்கும்பெயர், பொழிலென்பதுபூமிபெருமை-சோலைக்கும்பெயர், உணர்வென்பது தெளிவு-ஊடலொழிதல்-அறிவுக்கும்பெயர், குணமென்பது கயிறு குணம் வின்னாணிக்கும்

பெயர், கணமென்பது-நக்ஷத்திரம்ஓர்நோய் கூட்டம்காலஅட்டம்பேய் வட்டவடிவுக்கும்பெயர் எ-று. எ௩

ஆணமேகுழம்போடன்பாம் அலநாஞ்சிலமைவுமாமே
ஓணமாயோனுளாறும் ஊதியமிலாபங்கல்வி
காணமேபரியூண்செக்கோர் கண்ணல்பொற்காசுநாற்பேர்
கோணலேமாறுபாடுங் கூனுமாம்வளைவுமாமே.

இ-ள் ஆணமென்பது-குழம்பு இஷ்டத்துக்கும்பெயர், அலமென்பது கலப்பை - அமையுமென்றலுக்கும்பெயர், ஓணமென்பதுதிருவோண நக்ஷத்திரம்-நதிக்கும்பெயர், ஊதியமென்பது ஆதாயம் வித்தைக்கும்பெயர், காணமென்பது குதிரை யுணவு-செக்கு ஓர்கட்பிராணி பொற்காசுக்கும்பெயர், கோணலென்பதுமாறுபாடு கூன்-வளைவுக்கும்பெயர்-எ-று.

குணில்குறுந்தடிகடிப்பாங் குல்லியேதுளவுவெட்சி
மணிநவமணியேகண்டை வனப்பொடுகருமைநன்மை
துணிசோதிநாளே துண்டந் துளிமழைத்துளிபெண்ணுமை
பிணிமுகம்மயில்புட்பேராம் பிசிதநீரிறைச்சிவேம்பு.

இ-ள் குணிலென்பது-குறுந்தடி பறையடிக்குறுந்தடிக்கும்பெயர். குல்லையென்பது-வெட்சிப்பூஞ்செடிக்கும்பெயர், மணியென்பது நவமணி யானைமணி அழகு கருப்பு நன்மைக்கும்பெயர், துணியென்பது சோதிநட்சத்திரம்-துண்டநதுக்கும்பெயர், துளியென்பது-மழைத்துளி - பெண்ணுமைக்கும்பெயர், பிணிமுகமென்பது மயில் - பறவைப்பொதுவுக்குபெயர், பிசிதமென்பது நீர்-இறைச்சி-வேம்புக்கும்பெயர் எ-று. எ௫

நாணிலச்சைப்பேர்தானே கயிறென்றுநாட்டலாகும்
தோணியேகடைநாள்வங்கந் தொடுகணைதெப்பஞ்சேறு
வாணியேயோர்கூத்தின்பேர்வாக்குநாமகளுமாமே
ஏணியேயுலகோடெல்லையிறைவைமாணென்றஞ்சொல்லும்

இ-ள் நாணியென்பது வெட்கம் கயிற்றுக்கும்பெயர், தோணியென்பது-இரேவதி-நக்ஷத்திரம் மரக்கலம் அம்பு-தெப்பம்சேற்றுக்கும்பெயர், வாணியென்பது ஓர்கூற்று-சொல் சரஸ்வதிக்கும்பெயர், ஏணியென்பது உலகம்-எல்லை ஏணி மானுக்கும்பெயர்-எ-று. எ௬

திணைநிலங்கலமொழுக்கஞ்செவியென்பகாதுசேள்வி
பிணையாசைவிலங்கின்பெண்பேர் பிலவங்கங்குரங்குதேனா
கணையம்புதிரட்சியும்பேர் கட்கியேசாடுங்கூடும்
பணைவயல்பரியின்பந்தி பருத்திலவேயரசுபீடாம்.

இ-ள் திணையென்பது பூமி-ச திநன்னிலைக்கும்பெயர், செவியென்பது காது கேள்விக்கும்பெயர், பிணையென்பது ஆசை-பெண் மிருகத்துக்கும்பெயர், பிலவங்கமென்பது-குரங்கு தேனைக்கும்பெயர், கணையென்பது அம்பு திரண்டவடிவுக்கும்பெயர், கட்சியென்பது காடுபறவைக் கூட்டுக்கும்பெயர், பணையென்பதுகழனி-குதிரைப்பாகு பருத்தல் மூங்கில் அரசமரம்-பெருமைக்கும்பெயர்-எ-று. எஎ

யாணரோபுதுமைதச்ச ரெய்தியவனப்புநன்மை
பாணந்தான்மேகவண்ணக் குறிஞ்சியெய்கணைபூம்பட்டாம்
சேணென்பதகலநீளஞ் செப்பிடி லுயரமும்பேர்
ஆணைமெய்யுடனேவென்றிசூளேவலாகநாற்பேர்.

இ-ள் யாணரென்பது புதுமை தச்சர் - அழகுநன்மைக்கும்பெயர் பாணமென்பது மழை வண்ணக்குறிஞ்சி அம்புபட்டவஸ்திரத்துக்கும்பெயர், சேணென்பது அகலம்-நீளம் உயரத்துக்கும்பெயர், ஆணையென்பது உண்மை வெற்றி-சமதம்-ஏவலுக்கும்பெயர் எ-று. எஅ

அண்டமாகாயமுட்டை அயிலென்பவேலேகூர்மை
துண்டமேசாரைப்பாம்பு துணியொடுவதனமூக்காம்
கண்டமேகவடும்வெல்லங் கழுத்திடுதிரைவாளுண்டம்
முண்டகந்தாழைகள்ளு முளரிமத்தகமுண்மூலம்

இ-ள் அண்டமென்பது ஆகாயம்முட்டைக்கும்பெயர், அயிலென்பது வேலாயுதம்-கூர்மைக்கும்பெயர், துண்டமென்பது-சாரைப்பாம்பு துண்டம் முகம் மூக்குக்கும்பெயர், கண்டமென்பதுகவசம்-வெல்லம்கழுத்து திரைச்சீலை-வாளாயுதம் துண்டத்துக்கும்பெயர், முண்டகமென்பது-தாழைகள்-தாமரை நெற்றிமுட்செடிக்கும்பெயர் எ-று. எகூ

அண்டரோபகைவர்வானோராயரொன்றுகுமுப்பேர்
கண்டனேசதயநாளுஞ் சூரனும்வேறுகாட்டும்
கண்டல்கேதகைமுள்ளிப்பேர் கரைதலேவிளித்தலோசை
பண்டம்பொன்பணிகாரப்பேர்பாகுபால்குழம்புபாக்காம்

இ-ள் அண்டரென்பது பகைஞர் தேவர்-இடையருக்கும்பெயர், கண்டனென்பது சதயநக்ஷத்திரம் மூஞ்சூறுக்கும்பெயர், கண்டலென்பது தாழை-முள்ளிச்செடிக்கும்பெயர், கரைதலென்பது அழைத்தல்-சத்தத்துக்கும்பெயர், பாகென்பது-பங்கு குழம்பு பாக்குக்கும்பெயர்-எ-று. அ0

விண்டென்பமாயோன்வெற்பு மேகமேமூங்கில்காற்றும்
தொண்டென்பபழமையொன்பானொன்றுமொடுவழிபாடாமே

தண்டென்பகுழாயேவீணைதடிபடைமிதுனமோந்தி
வண்டென்பசங்குகுற்றம்வளையளிவாளியைம்பேர்.

இ-ள் விண்டென்பது திருமால்-மலை மேகம்-மூங்கில் காற்றுக்கும்பெயர், தெண்டென்பது பழமை-ஓன்பது அடிமை வழிபடுதலுக்கும்பெயர், தண்டென்பது துளையுடைப் பொருள்வீணை-தடிசேனை மிதுனவிராசி-ஓணுனுக்கும்பெயர், வண்டென்பது சங்கு-குற்றம்-கைவளைவண்டு-அம்புக்கும்பெயர் எ-று. அக

உண்டையேதிரளையாகுமுறுபடைவகுப்புமென்ப
தொண்டையாதொண்டைகொவ்வை தாங்குமயானைத்துதிக்கை
கொண்டையேமயிர்முடிக்கு மிலந்தைப்பின்கனிக்குங்கூற்றும்
கண்டிகைபதக்கம்வாகுவலயமேகலன்பெய்செப்பு.

இ-ள் உண்டையென்பது திரண்டவடிவு - படைவகுப்புக்கும்பெயர், தொண்டையென்பது ஆதொண்டைச்செடி கோவைக்கொடியானைத்துதிக்கைக்கும்பெயர், கொண்டையென்பது மயிர்முடி-இலந்தைபழத்துக்கும்பெயர், கண்டிகையென்பது பதக்கம்-தோளணி ஆபரணச்செப்புக்கும்பெயர்-எ-று அஉ

தண்ணமோர்கட்பறைப்பேர்தறித்திடுமழுவுமாகும்
வண்ணமோர்சந்தம்பண்பாம் மறையிராசியமேவேதம்
பண்ணெனன்பபாட்டும்பண்ணும்பரிமாவின்கலணையும்பேர்
மண்ணனுமொப்பனைபபேர்முறுவின்மார்ச்சனையுமாமே.

இ-ள் தண்ணமென்பது வருகட்பறை பரசாயுதத்துக்கும்பெயர், வண்ணனென்பது அழகு நிறம்-குணத்துக்கும்பெயர் மறையென்பது மறைவு வேதத்துக்கும்பெயர், பண்ணென்பது இசைப்பாட்டு பண்குதிரைச்சேணத்துக்கும்பெயர், மண்ணென்பதுஅறு அலங்காரம் மத்தளத்திற்பூசுமண்ணுக்கும்பெயர்-எ-று, அங

அணங்குநோயழகுதெய்வமாசைபெண்கொலைவருத்தம்
துணங்கையேவிழாப்பேய்க்கூத்தாமாதிரைநாளுஞ்சொல்லும்
குணங்கர்தோற்கருவிமாக்கள்குயிலுவரிருளர்முப்பேர்
துணங்கறவிருள்விழாவாந்தோன்றலேசுதனுந்ன்பே.

இ-ள் அணங்கென்பது வியாதி-அழகு தெய்வம்-ஆசைபெண்கொல்லுதல் பிரயாசத்துக்கும்பெயர், துணங்கையென்பது திருவிழா - பேயக்கூத்து-திருவாதிரை நட்சத்திரத்துக்கும்பெயர், குணங்கரென்பது தோற்கருவியாளர் நரம்பினாய்கருவிக்குறியோர்-சண்டாளருக்கும்பெயர், துணங்கறலென்பது இருள்-திருவிழாவுக்கும்பெயர், தோன்றலென்பது மகன் அரசனுக்கும்பெயர்-எ-று. அச

புணரியேவாரிநீரிற்பொருதிரைகளைமுப்பேராம்
பணிலமேசலஞ்சலஞ்சங்கிருபெயர்பகரலாமே
கலுவேங்கைமரமதாகுங் கழனிசூழ்மருதமும்பேர்
பணியேதோற்கருவிவார்த்தைபாம்புசெய்தொழிலுமாமே.

இ-ள் பணமென்பது பாம்பின்படம்-பாம்பு பொற்காசுக்கும்பெயர், பணமென்பது வாசனை-கூட்டம்-கலியாணத்திற்கும்பெயர், மணவையென்பது பரண் பிரகாசத்துக்கும்பெயர், பையுளென்பது அற்பம்-வியாதிக்கும்பெயர், நுணவையென்பது எண்ணெய் மாவுக்கும்பெயர், நுணியென்பது கூர்மை-நுட்பத்துக்கும்பெயர் எ-று. ௬௩

ணகரவெதுகை முற்றிற்று.

## தகரவெதுகை.

மதலையேகொன்றைபிள்ளை மரக்கலங்கொடுங்கைதூணும்
சிதலையேநோய்துணிசெல்லென்பசிதநீர்துளியேமேகம்
பதலையோர்கட்பறைப்பேர்பருவரைதாழிக்கும்பேர்
கதலியேவாழைவேறுகாற்றாடிதுவசமாற்பேர்.

இ-ள் மதலையென்பது கொன்றைமரம்மகன்-மரக்கலம்கொடுங்கைதூணுக்கும்பெயர் சிதலையென்பது-வியாதி சிலைத்துணி கறையானுக்கும்பெயர்,ஒருபதலையென்பது கட்பறை-மலைதாழிக்கும்பெயர்,கதலியென்பதுவாழைதேற்றுமரம்-காற்றாடி-விருதுகொடிக்கும்பெயர் எ-று. ௬௪

இதழ்பனையேடுபூவினிதழுதடெனவிம்முப்பேர்
கதழ்வுவேகஞ்சிறப்பாங்களிசெருக்கொடுகுழம்பு
மதுகமேயிருப்பையெட்டிமதுரமாந்தராவுமாமே
சிதடனந்தகன்மூடன்பேர்திதிபக்கநிலைபேறும்பேர்.

இ-ள் இதழென்பது பனையேடு பூவிதழ் உதடுக்கும்பெயர்,கதழ்வென்பது சீக்கிரம்சிறப்புக்கும்பெயர், களியென்பது களிப்பு குழம்புக்கும்பெயர், மதுகமென்பது, இருப்பைமரம் எட்டிமரம்-தித்திப்பு பொன்முதலிய வெழுவகை லோகத்தொன்றுக்கும்பெயர், சிதடனென்பது குருடன்-மூடனுக்கும்பெயர், திதியென்பது பிரதமைமுதலியதிதிநிலைபெறுதலுக்கும்பெயர்-எ-று. ௬௫

ஆதனுருயிரோர்வில்லான்அங்கியோர்நாமச்சண்டை
போதகம்யானைக்கன்றுபோற்றியவிளமைக்கும்பேர்
ஏதந்துன்பக்குற்றப்பேர்ஈமமேயானசுகாட்டம்
சூதன்றேர்ப்பாகன்சூதன்சுவேதமேவேர்வுவெண்மை.

இ-ள் ஆதனென்பது உயிர்-அறிவிலானுக்கும்பெயர், அங்கியென்பது நெருப்பு சட்டைக்கும்பெயர், போதகமென்பது யானைக்கன்று இளையதன்மைக்கும்பெயர் ஏதமென்பது துன்பம்குற்றத்துக்கும்பெயர், ஈமமென்பது சுடுகாடு குவிக்கும்பெயர், சூதனென்பது தேர்ப்பாகன் சூதாடுவோனுக்கும்பெயர், சுவேதமென்பது வேர்வை வெண்மைக்கும்பெயர் ம

சூதமாமரமேவண்டு சூதுடனிரதந்தோன்றல்
சூதகமேயாசூசந்தோகை மார்தோயாப்பூப்பாம்
பூதமாலிறந்தகாலம் புனிதமைம்பூதஞ்சீவன்
மாதவமதவம்வசந்தம் வாதமேதர்க்கங்காற்றும்

இ-ள் சூதமென்பது மாமரம் வண்டு சூது இரசம் பிறப்புக்கும்பெயர் சூதகமென்பது அசுத்தம் - மகளிரிடக்கும்பெயர், பூதமென்பது ஆலமரம்-இறந்தகாலம் சுத்தகாலம் சுத்தம்-பிருதிவிமுதலியவைம்பூதம் உயிருக்கும்பெயர், மாதவமென்பது தவம் வசந்தகாலத்துக்கும்பெயர், வாதமென்பது தருக்கம்-காற்றுக்கும்பெயர்-எ-று. ௭

மதன்வலிமேவெள்வனப்பாம் வலித்தலேவிளத்தல்பேசல்
பதங்கம்புட்பொதுவிட்டிற் பேர்பலிபூசைபிச்சைசீற்றும்
சிதம்விண்மீன்ஞானம்வெள்ளைசெயமுறப்பட்டதாமே
நிதம்பமேயல்குலென்ப நெடுமலைப்பக்கமும்பேர்.

இ-ள் மதனென்பது வலிமை-மன்மதன்-அழகுக்கும்பெயர். வலித்தலென்பது விளத்தல் - பேசலுக்கும்பெயர், பதங்கமென்பது பறவைப்பொதுவிட்டிற்பறவைக்கும்பெயர் பலியென்பது பூசைபிச்சைசீற்றக்கும்பெயர். சிதமென்பது நக்ஷத்திரம் ஞானம் வெள்ளை செயமுறப்படுதலுக்கும்பெயர். நிதம்பமென்பது-அல்குல் மலைப்பக்கத்துக்கும்பெயர்-எ-று.

சதியுரோகிணிகற்பாட்டுவஞ்சனைதாளவொற்று
விதியென்பவிலையயன்பேர்வெட்டுவென்முகநாள்வேடன்
பதியிறைமுகவூராம்பதுக்கையேபாறைதூறு
பிதிர்க்கைநொடிதூவற்பேர்பிண்டமேதிரளைப்பிச்சை.

இ-ள் சதியென்பது உரோகிணிநக்ஷத்திரம் கற்புடைமகள் படம் தாளவொற்றுக்கும்பெயர், விதியென்பது தொழில்-பிரமனுக்கும்பெயர் வேட்டுவனென்பது-மகநக்ஷத்திரம் வேடனுக்கும்பெயர், பதியென்பது அரசன்-நாயகன் ஊருக்கும்பெயர். துக்கையென்பது பாறை சிறுதூறுக்கும்பெயர். பிதிரியென்பது கதை கைநொடிதூவலுக்கும்பெயர், பிண்டமென்பது திரட்சி பிச்சைக்கும்பெயர்-எ-று. ௯

ஆதியேமுதனேரோட லருகன்மாலீசன்வேதன்
பூதியம்புவியுடற்பேர் பொம்மலேபொலிவுஞ்சோறும்
பாதிரிபாடலப்பேர்பணைத்தெழுமூங்கிற்கும்பேர்
ஏதியாயுதம்வாளென்ப இறைநூலாபரணமாமே

இ-ள் ஆதியென்பது முதல் நேரோடல் அருகன் திருமால்-சிவன்பிரமனுக்கும்பெயர். பூதியென்பது பூமி சரீரத்துக்கும்பெயர் பொம்மலென்பது மங்கலம்சோற்றுக்கும்பெயர், பாதிரியென்பது பாதிரிமரம் - மூங்கிலுக்கும்பெயர், ஏதியென்பது ஆயுதம் வாளாயுதத்துக்கும்பெயர் இறையென்பது நூல்-ஆபரணத்துக்கும்பெயர் எ-று. ௰

சித்திரபானுசெந்தீதிவாகரனுண்டொன்றின்பெயர்
பத்திரமில்லைபவப்புப் படைநன்மைசிறகேபாணம்
சித்திரமழகோர்பாடல் சிறந்தவிம்மிதமேரண்டாம்
சத்திரங்குடையேரன்ன சாலைகைவிடாவேல்கேள்வி

இ-ள் சித்திரபானுவென்பது நெருப்பு-சூரியன் ஓர்வருடத்துக்கும்பெயர் பத்திரமென்பது இலை அழகு-ஆயுதம்-நன்மைபறவையினிறகு-அம்புக்கும்பெயர் சித்திரமென்பது அழகு-ஓர்கவி அதிசயம்- அமணக்கும்பெயர், சத்திரமென்பது குடை அன்னசத்திரம்-கைவிடாவேல் யாகத்துக்கும்பெயர்-எ-று. ௱௯

காத்திரங்கனமெய்சீற்றம் களிற்றினமுற்காலேகிரி
நேத்திரங்கண்பட்டாடை நீலியேகருமைதுர்க்கை
கோத்திரம்விடவிகாமே குருவொடுமலையுமாமே
பாத்தியேசிறுசெய்யில்லம் பகுத்தலும்வகுத்தநாமம்.

இ-ள் காத்திரமென்பது கனம்-உடல் கோபம்-யானைமுன்கால் - கிரிக்கும்பெயர், நேத்திரமென்பது கண் - பட்டுவஸ்திரத்துக்கும்பெயர், நலியென்பது கருப்பு துர்க்கைக்கும்பெயர் கோத்திரமென்பது பூமி-குலம் மலைக்கும்பெயர், பாத்தியென்பது சிறுவயல் வீடு பாகுபாட்டுக்கும்பெயர் எ-று. ௱௰

சதமிலையிறகோரொன்றும் சத்தமேயோசையேழாம்.
கதவுமேககழிதாப்பாள் கதங்குபேய்நடுங்கமற்றி
பகழிரவின்பதஞ்செவ்விபதவிவாள்வரிசைவார்த்தை
மந்திமேமுன்னிலையசைச்சொன்மாதமம்புலிபுத்திப்பேர்.

இ-ள் சதமென்பது இலை-இறகு-ஓரொன்றுக்கும்பெயர், சத்தமென்பது ஓசை ஏழுக்கும்பெயர்,கதவென்பது கதவு தாப்பாளுக்கும்பெயர்,கழங்கென்பது பேய்நடுக்கம்-கழற்காயச்சிக்கும்பெயர்,பதமென்பதுசோறு இன்பம்-காலம்-வழி-பாதம்-இசைசொல்லுக்கும்பெயர் மத்தியென்பது முன்னிலையசைச்சொல்மாதம்-சந்திரன்-புத்திக்கும்பெயர்-எ-று. ௱௰௧

பீதகஞ்சாந்துபொன்மைபெருந்தெனமிருவேலிபபேர்
சாதகம்வானம்பாடி சனனம்பாரிடமுப்பேரே
சேதகஞ்சேறுசெம்மை தேயந்தானுடம்புநாடாம்
மாதரோவிடைச்சொல்காதல் வனப்போடுமகளிராமே.

இ-ள் பீதகமென்பது நால்வகைச்சாந்திலொன்று பொன்னிறம்-செம்பொன்-வெட்டிவேருக்கும்பெயர், சாதகமென்பது வானம்பாடி-பிறப்பு பூதத்துக்கும்பெயர், சேதகமென்பது சேறு சிவப்புக்கும்பெயர், தேயமென்பது சரீரம் நாட்டுக்கும்பெயர், மாதரென்பது இடைச்சொல் ஆசை அழகு பெண்களுக்கும்பெயர் எ-று. ௱௰௨

சோதிமாவருகன்பானுசுடர்விண்மீசனோர்கள்
பிதியேநரசஞ்செல்வம் நூர்கந்தம்புழுதிசேரும்

வீதியேதெருநேரோட்டல மேலென்பதிடம்விண்மேற்காம்
மாதிரம்திசையாகாய மலையானைநிலமைப்பேரே.

இ-ள் சோதியென்பது திருமால்-அருகன்-சூரியன்-ஒலி-தீபம்-சிவன்ஓர்நட்சத்திரத்துக்கும்பெயர் பூதியென்பதுநரகம்செல்வம் திநாற்றம்-புழுதிவிபூதிக்கும்பெயர், வீதியென்பது தெரு-நேரோடலுக்கும்பெயர், மேலென்பது இடம் - ஆகாயம்மேற்குக்கும்பெயர், மாதிரமென்பது திக்கு ஆகாயம்-மலை யானை-பூமிக்கும்பெயர் எ-று. ௧௧௩

தாதுபொன்முதலாமேழுஞ் சடமுறுதாதோரேழும்
பூதமோரைந்துங்காவிக் கல்லுடன்பூந்தாதும்பேர்
வேதிகைபலகைதிண்ணை வெதிரொன்பசெவிடுவேணு
கேதுவேசிவிபதாகைகிள்ளைதான்குதிரைதந்தை

இ-ள் தாதென்பதுபொன் முதலியவெழுவகை லோகம்-உடலிற்றோன்றியவிரதமுதலிய வெழுவகைத்தாது மண்முதலிய-வைவகைப்பூதம் காவிக்கல்லுக்கும்பெயர், வேதிகையென்பது சேடகம் திண்ணைக்கும்பெயர், வெதிரொன்பது செவிடு-மூங்கிலுக்கும்பெயர், கேதுவென்பது ஓர்கோடி-துகிற்கொடிக்கும்பெயர்,கிள்ளையென்பதுகுதிரை கிளிக்கும்பெயர்-எ.

கதுப்பேயாண்மயிரும்பெண்மான் மயிரொடுகவுளுமுப்பேர்
விதிப்பேகம்பிதமிக்காகும் வித்தம்பொன்பழிப்புஞானம்
அதிர்ப்பெலிநடுக்கமென்ப அகப்பாவேபுரிசைமேடை
ஒதுக்கமேநடைமரப்பாம் ஒருத்தலாண்விலங்குவேழாம்.

இ-ள் கதுப்பென்பது மைந்தர்மயிர்-பெண்மயிர்-கபோலத்துக்கும்பெயர், விதப்பென்பது நடுக்கம்-மிகுதிக்கும்பெயர், வித்தமென்பது பொன் இதழ்வு ஞானத்துக்கும்பெயர், அதிர்ப்பென்பது சத்தம்-நடுக்கத்துக்கும்பெயர், அகப்பாவென்பது நடைமதில் - மதிலுண்மேடைக்கும்பெயர், ஒதுக்கமென்பது நடைமறைப்புக்கும்பெயர், ஒருத்தலென்பது ஆண்மிருகம் யானைக்கும்பெயர் எ-று. ௧௧௫

பத்திரிபறவைகாளிபரியுலைபாணமைம்பேர்
அத்திரிகழுதைவிண்ணொட்டகம்பரியசலமம்பாம்
சத்தியேயுமைவேய்கான்றல் குடைவலிதுவசந்தானும்
சுத்தியேயகம்வெண்சங்குஞ் சுத்தமோர்கருவிக்கும்பேர்.

இ-ள் பத்திரியென்பது பக்ஷி-காளி-குதிரை இலை - அம்புக்கும்பெயர், அத்திரியென்பது கழுதை ஆகாயம் ஒட்டகம்-குதிரைமலைபாணத்துக்கும்பெயர், சத்தியென்பது பார்வதி-வேலாயுதம் கக்கல்-குடை வலிமைதுகிற்கொடிக்கும்பெயர், சுத்தியென்பது அகல்-சங்கு-சுசி - ஓர்கருவிக்கும்பெயர் எ-று. ௧௧௬

புத்தன்மாலருகன்சாத்தன் பூழிறுனகில்பூமிப்பேர்
புத்தேளேபுதுமைதேவாம் பூட்கைதோர்மேற்கோள்யாளி

தைத்தருன்னபேர்சாறுகள்விழவுதாரும்
மூத்தலேபிரியமோட்ட மருதநன்னிலமுத்தாமே

இ-ள் புத்தனென்பது திருமால்-அருகன் - சாத்தனுக்கும்பெயர், பூமியென்பது அகில்- பூமிக்கும்பெயர், புத்தேளென்பது புதுமைதெய்வத்துக்கும்பெயர், பூட்டென்பது யானை-மேன்மையாளிக்கும்பெயர், தைத்தலென்பதுதுணிமுதலியவைதைத்தல் அலங்கரித்தற்கும்பெயர்சாறென்பதுகள் திருவிழா மரக்குலைக்கும்பெயர், மூத்தலென்பதுபிரீதி-உதடு-மருதநிலம் முத்துக்கும்பெயர்-எ-று. ககஎ

அத்தனேமூத்தோன்றந்தை யரனொடுகுருவுநாற்பேர்
சித்தமேதிடமுள்ளப்பேர் சேகரந்தலேமாவேராம்
கைத்தலேசினங்கைப்பாகும் கஞரலேபொலிவுகன்றல்
சித்தென்பசய்மேஞானம் செய்யென்பபுலமேவற்பேர்

இ-ள் அத்தமென்பது மூத்தோன்-பிதா-சிவன்-குருவுக்கும்பெயர், சித்தமென்பது மெய்-மனதுக்கும்பெயர், சேகரமென்பதுதலை-மாமரம்-அழகுக்கும்பெயர், தைத்தலென்பது கோபம்கசப்புக்கும்பெயர், தஞரலென்பது மங்கலம் சினக்குறிப்புக்கும்பெயர்,செய்யென்பது விளைநிலம் செய்யனேவற்கும்பெயர் எ-று. ககஅ

உத்திரஞ்சித்திரஞ்சேர்ந் தொளிறுமில்லுறுப்போடோர்நாள்
பைத்தலேமுனிவினேடு பசுத்தலும்பகரலாமே
மத்திகையேசம்மட்டி சுடர்நிலேத்தண்டுமாமே
மத்தென்பதயிர்மத்தோடு மத்தமுமிருபேருமே.

இ-ள் உத்திரமென்பது இல்லுறுப்பாகிய உத்திரம் - ஓர் நட்சத்திரத்துக்கும்பெயர், பைத்தலென்பது கோபம்-பசுவைக்கும்பெயர் மத்திகையென்பது குதிரைச்சம்மட்டி விளக்குத்தண்டு-பூமாலைக்கும்பெயர், மத்தென்பது தயிர்முதலியகடையுமத்துஊமத்தைக்கும்பெயர்-எ-று. ககக

மதர்வுமேவசல்வனப்பு வலியிடமிகுதியைம்பேர்
புதவென்பகதவோர்புல்லாம்புணர்ச்சியேகலவிகூடல்
சிதருறிதிவலேவண்டு சிலேயின்றுணிபூந்தாதாம்
அதர்வழிபுழுதியாட்டின் தருகநுண்மணலுமாமே.

இ-ள் மதர்வென்பது ஆசைப்பெருக்கம் அழகு-வலிமை இடம்மிகுதிக்கும்பெயர், புதமென்பது கதவு ஓர்வகைப்புல்லுக்கும்பெயர், புணர்ச்சியென்பது சையோகம் - இசைப்புக்கும்பெயர், சிதரென்பது உரி-துளி வண்டு-சீலைத்துணிக்கும்பெயர், அதரென்பது வழி புழுதி-ஆட்டினதர் நுண்மணலுக்கும்பெயர் எ-று ௧௨௰

முதலேசெங்கிடையிடங்கர் முருந்தெனமொழியலாகும்
அ?மிறங்குதல்பாதாளங் கீழுமென்றறையுமுப்பேர்

கதிநடைவினாவேநான்கு கதியொடுகெதியுங்காட்டும்
மதமிபமதஞ்செருக்காம் மாயையேமாயஞ்சத்தி.

இ-ள் முதலையென்பது செஞ்சடை நீர்வாழ்முதலை-இறகினருக்குறுத் துக்கும்பெயர், அதமென்பது இறங்குதல்-பாதலம்கீழுக்கும்பெயர். கதி யென்பது நடையின்-வேகம் தேவகதிமுதலியநாற்கதி-முத்திக்கும்பெயர் மதமென்பது யானைமதம்-களிப்புக்கும்பெயர், மாயையென்பதுவஞ்சனை சத்திக்கும்பெயர்-எ-று. ௧௨௧

பீதமேசாந்துமஞ்சள் பிலங்கெதொடுபொன்மைப்பேரே
பேதையோர்பருவமூடன் பெண்டரித்திறனேநாற்பேர்
வாதுவர்யானைப்பாகர் வயப்பரிமாவடிப்பேர்
மூதிரையாதிரைப்பேர் முக்கணன்பேருமாமே.

இ-ள் பீதமென்பது நால்வகைச் சாந்திலொன்று-மஞ்சள்பொன்பொ ன்னிறத்துக்கும்பெயர், பேதையென்பதுபருவம்அறிவிலான்-பெண்-தரி த்திரனுக்குபெயர்வாதுவரென்பதுயானைப்பாகர்குதிரைப்பாகருக்கும்பெ யர், மூதிரையென்பது-திருவாதிரை - நக்ஷத்திரம்-சிவனுக்கும்பெயர்-எ.

தாதியேபரணிநாளுமடிமையுமிருபேர்சாற்றும்
போதுதான்காலம்பூவாம்போர்வைதோல்கவசமீக்கோள்
சாதமேதிடம்பதப்பேர்தகைமையேரியல்புபீடாம்
வீதலேகெடுதல்சாவேயிலம்பாடும்விளம்புமுப்பேர்

இ-ள் தாதியென்பதுபரணி-நட்சத்திரம் - அடிமைக்கும்பெயர், போ தென்பது பொழுது-மலருக்கும்பெயர், போர்வையென்பது தோல்மெய் க்கவசம்-மேற்போர்வைக்கும்பெயர், சாதமென்பது உம்மை-சோற்றுக் கும்பெயர், தகைமையென்பது கெடுதல் அழகு-குணம்-பெருமைக்கும் பெயர், வீதலென்பது கெடுதல்சாதல்வருமைக்கும்பெயர்-எ-று. ௧௨௩

ரகரவெதுகை முற்றிற்று.



## நகரவெதுகை.

இந்தனமிசையேகாட்ட மெரியிடுகளலுமாகும்
சந்தமேநிலம்வனப்புஞ்சாற்றியகவிதைசாந்தம்
கந்தமிந்தியம்பருத்தல் கழுத்தடிகிழங்குநாற்றம்
மந்திரம்விசாரங்கோயில் வாசியின்குழாம்வீடேகண்

இ-ள் இந்தனமென்பது மேல் விறகு-அக்கினி-சுவாலைக்கும்பெயர், ச ந்தமென்பது நிறம்-அழகு-கவிதை சந்தனத்துக்கும்பெயர் கந்தமென்

